19th August 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மாடுகள் ஒரத்த நாட்டில் அபிவிருத்தி செய்யப்பட்டு வருகின்றன. இது தவிர ஆட்டுப் பண்ணையும் இருக்கிறது. அது மாத்திரமல்ல, எருமை மாட்டுப் பண்ணையும் நடத்த உத்தேசம் இருக்கிறது. நீலகிரியில் நடத்தப்பட்டுவருகிற மில்க் காலனியை அரசாங்கமே எடுத்து நடத்தும். இது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப் படும்.

*Harijan Hostels (Salem)*

* 1255 *Q.*—SRI M. K. MARIAPPAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) சேலம் ஜில்லாவில் எத்தனை ஹரிஜன மாணவர் விடுதிகள் உள்ளன ?

(இ) சேலம் வட பகுதியில் எத்தனை விடுதிகள் உள்ளன ?

THE HON. SRI P. KAKKAN : (a) Twenty-one Harijan Hostels.

(b) Seven Harijan Hostels.

SRI M. K. MARIAPPAN : வடக்கு ஜில்லாவாக இருக்கும் சேலம் மாவட்டம் மிகவும் பிற்போக்காகவும் கல்வித்தரத்தில் குறைந்திருப்பதற்கும் காரணம் அங்கே போதிய ஹாஸ்டல்கள் இல்லாததுதானா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : ஜில்லாவில் வடக்கு தெற்கு என்று பார்ப்பது கிடையாது. எங்கெல்லாம் ஹாஸ்டல்கள் தேவையோ அங்கெல்லாம் ஏற்படுத்துகிறோம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*Overbridges (Railway Level Crossing)*

1256 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஜூன் மீ 24-ந் தேதியில் நடைபெற்ற சென்னை ராஜ்ய போக்குவரத்து போர்டு கூட்டத்தில் ரயில்வே லெவல் கிராசிங்குகளில் மேம்பாலம் கட்டத் தேவைப்படும் முழுச் செலவையும் சர்க்காரே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், மேல் பாலம் கட்டப்பட வேண்டிய பிரதேசங்களிலிருக்கும் ஸ்தல ஸ்தாபனங்களை இதற்காகப் பங்குத் தொகை கேட்கக் கூடா தென்றும் சிபாரிசு செய்யப்பட்டு அரசாங்கத்திற்கு அனுமதிக் கப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியானால், இச் சிபாரிசின் பேரில் அரசாங்கத்தார் எடுத்த நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The Government of India were requested to liberalise the existing principles governing the constructions of over/under bridges in replacement of level crossings. As the Government of India have not agreed to revise Railway Code Rules, the question

[19th August 1961

of meeting the entire Road authorities share of cost of construction of over/under bridges by the State Government itself is separately under examination.

SRI P. G. MANICKAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 17 இடங்களில் மேல் பாலங்கள் கட்டுவதற்கு திட்டமிட்டிருப்பதாகத் தெரிகிறது. இதன் செலவை நகரசபை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருந்தால் சர்க்கார் கடன் கொடுப்பது பற்றி யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நகரசபைச் செலவை ஏற்றுக்கொள்ள முடியாவிட்டால் சர்க்கார் கடன் கொடுப்பதுபற்றி யோசனை செய்யும்.

SRI K. VINAYAKAM : Does the recommendation of the Madras State Transport Board cover the City of Madras also? If so, may I know the stage at which the construction of an over-bridge at the level crossing near the Kodambakkam Railway Station stands?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. It covers the requirements of the City also. As regards the exact position of the construction of an overbridge over the Kodambakkam Level Crossing, I would like to have notice, Sir.

SRI A. A. RASHEED : What is the percentage of the cost of construction of overbridges borne by the Government in the Madras City?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I would like to have notice.

SRI T. SAMPATH : May I know how the priority is worked out?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The priority that is fixed relates to the intensity of the traffic.

SRI S. M. ANNAMALAI : இந்த மேல்பாலங்களை மாநில சர்க்கார் எடுத்து நடத்துமா அல்லது மத்திய சர்க்கார் எடுத்து நடத்துமா என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ராஜ்ய அரசாங்கம் தான் எடுத்து நடத்தும்.

SRI M. K. SOMASUNDARAM : மேல்பாலங்களை எந்தெந்த இடங்களில் கட்டத் திட்டமிடப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத் தனியாக நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

SRI T. SAMPATH : Will the State Government give immediate help to the Municipalities in respect of their shares?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, the financial inability of the municipality will not stand in the way of overbridges being constructed.